# கோயம்புத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள்

## தொகுதி - 2


பொதுப்பதிப்பாசிரியர்

முனைவர் **சீதாராம் குருமூர்த்தி** இ.ஆ.ப.

முதன்மை ஆணையர்

பதிப்பாசிரியர்கள்

**முனைவர் அர. பூங்குன்றன்**

**முனைவர் இரா.ப. கருணானந்தன்**

**திரு பெ. கௌதமபுத்திரன்**



*வெளியீடு*

**தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை**

சென்னை – 600 008

2007

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | **Coimputtur Mavatta Kalvettukal Vol. - 2** |
| Editor | : | Principal Commissinor |
| Copy Right | : | T.N. State Dept. of Archaeology |
| Subject | : | History |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Publication No. | : | 187 |
| Year | : | 2007 |
| Type Point | : | 12 |
| No.of. Pages | : | 152 |
| Paper Used | : | 80 Gsm Maplitho |
| Type Setter | : | **Cavin Laser Printers**<br>19/9, Devaraja Mudhali Street,<br>Chennai - 600 005.<br>Phone: 9940351234. |
| Printer | : | **The Chennai Printers' Industrial Co-op. Society Ltd.,**<br>118, Big Street, Triplicane,<br>Chennai - 5. P h: 28446287 |
| Publisher | : | **State Dept. of Archaeology,**<br>Tamil Valarchi Valagam,<br>Halls Road, Egmore,<br>Chennai - 600 008. |
| Price | : | **Rs. 90/-** |

# பதிப்புரை

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை கோயில்கள் பற்றிய ஆய்வு நூல்கள், மாவட்டத் தொல்லியல் கையேடுகள், அகழாய்வு அறிக்கைகள், கல்வெட்டுத் தொகுதிகள், கல்வெட்டுக் காலாண்டு இதழ்கள் ஆகியவற்றைத் தொடர்ந்து வெளியிட்டும்; தொல்லியல் வகுப்புகள், கண்காட்சிகள், கருத்தரங்குகள், நடத்தியும்; அகழாய்வுகள் மேற்கொண்டு மாவட்டங்களில் அகழ்வைப்பகங்கள் அமைத்தும்; ஆய்வாளர்கள், மாணவர்கள், பொதுமக்களிடையே தமிழகத் தொல்லியல் குறித்த ஈடுபாட்டையும் விழிப்புணர்வையும் தொடர்ந்து ஏற்படுத்தி வருகிறது.

அவ்வகையில் கல்வெட்டுத் தொகுதிகள் அச்சிடும் வரிசையில் கோயம்புத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள் தொகுதி-1, 2006ல் வெளியிடப்பட்டது. அதனைத் தொடர்ந்து தொகுதி - 2 ஆக இத்தொகுதி வெளியிடப்படுகிறது.

இத்தொகுதியில் II-ஆம் நூற்றாண்டு தொடங்கி 19-ஆம் நூற்றாண்டு வரையிலான கல்வெட்டுகளும் ஒரு செப்பேடும் உள்ளன. கல்வெட்டுகள் அரசர்களின் மெய்க்கீர்த்திகளைப் பெற்று நீண்ட கல்வெட்டுகளாக அமையாமல் சுருக்கமாகச் சிறு சிறு கல்வெட்டுகளாக அமைந்துள்ளன. கோயம்புத்தூர் மாவட்டத்திற்கே உரிய பல தனித்தன்மைகளை இக்கல்வெட்டுகள் மூலம் நாம் அறியலாம். கல்வெட்டுகள் பலவற்றிலும் எழுத்துக்கள் சிதைவுற்றுள்ளதை நோக்கும் போது பொதுமக்களிடையே மேலும் மேலும் விழிப்புணர்வு ஏற்பட்டு அவை வெகு இயல்பாகப் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதை நாம் உணர்கின்றோம்.

இக்கல்வெட்டுத் தொகுதிக்கான கல்வெட்டுகள் 2003,2004-ஆம் ஆண்டுகளில் திரு.மே. சீனிவாசன், இளநிலைக் கல்வெட்டு ஆய்வாளர் மற்றும் திரு.ம. மதிவாணன், திரு.பி. முருகேசன், திரு.சி. ஜோதி, திரு. கு. அன்பழகன். ஆகிய கல்வெட்டுச் சிற்றெழுத்தார்களால் அமரர் முனைவர் இரா.ப. கருணானந்தன் கல்வெட்டாய்வாளர், திரு.பெ. கௌதமபுத்திரன் தொல்லியல் அலுவலர் ஆகியோர் மேற்பார்வையில் படியெடுக்கப்பட்டன. இவர்களுடன் முனைவர். அர. பூங்குன்றன், உதவி இயக்குநர் (ஓய்வு) பதிப்புப் பணியில் ஈடுபட்டு இத்தொகுதிக்கு ஆய்வு முன்னுரை எழுதியுள்ளார். இத்தொகுதியின் வரைவினை திரு.கோபு தட்டச்சுச் செய்தார். சொல்லடைவு திரு. க. ஈஸ்வரன், திரு. ஆர்.கே.சேட்டு, திரு.கு. குமரவேல் ஆகியோரால் தயார் செய்யப்பட்டது. இந்நூலின் வடிவமைப்பு மற்றும் அச்சுப் பணியினை கல்வெட்டுப் பிரிவுத் தலைவர் முனைவர். சு. இராசகோபால் மேற்கொண்டார். இவர்கள் அனைவருக்கும் எனது பாராட்டுக்கள்.

இத்தொகுதியில் பயன்படுத்தப்பட்டுள்ள கிரந்த எழுத்துக்கள் சென்னை ஐ.ஐ.டி பேராசிரியர் முனைவர். கல்யாண கிருஷ்ணன் அவர்களாலும் தமிழ் எண்கள் மற்றும் குறியீடுகள் தமிழ் இணையம் வழியாகப் புலவர். திரு. கண்ணையன் அவர்களாலும் வழங்கப்பட்டவை. அவர்களுக்கும் எனது நன்றி.

தமிழ் மொழியின் தொன்மைச் சான்றுகளான கல்வெட்டுகளை அச்சிட நிதி ஒதுக்கீடு வழங்கி ஊக்கம் தந்து வரும் தமிழ் நாடு அரசிற்கு எனது மனமார்ந்த நன்றி.

தொல்லியல் ஆய்வாளர்கள், மாணவர்கள் மற்றும் பொதுமக்கள் இந்நூலினைப் பெரிதும் பயன்படுத்தித் தமிழகத் தொல்லியலுக்கு மேலும் சிறப்புகள் சேர்த்திடுவார்கள் என்பதில் ஐயம் இல்லை.

*சென்னை-8* **சீதாராம் குருமூர்த்தி**

*13.03.2007* முதன்மை ஆணையர்.

# பொருளடக்கம்


**பதிப்புரை** iii

**முன்னுரை** i

**கோயம்புத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள்**

**பொள்ளாச்சி வட்டம்** 1–48

ஆனைமலை 1
கிணத்துக்கடவு 24
சிங்காநல்லூர் 28
சோழனூர் 30
புதுச்சாமிகோயில் 31
பெரியகளந்தை 32
தேவனாம்பாளையம் 37
வடசித்தூர் 47

**மேட்டுப்பாளையம் வட்டம்** 49–68

இரும்பறை 49
இலுப்பநத்தம் 51
காரமடை 53
குரும்பாளையம் 54
மருதூர் 55
வெள்ளாதி 59
வெள்ளியங்காடு 61

**திருப்பூர் வட்டம்** 69–113

அபிஷேகபுரம் 69
கண்டியன்கோயில் 74
கொடுவாய் 75
பெருமாநல்லூர் 91

**பல்லடம் வட்டம்** 114–130

அலகுமலை 114

செலக்கரிச்சல் 116

**பிற்சேர்க்கை** 131

இருகூர் செப்பேடு

**Summary of Inscriptions** 133

**கல்வெட்டுக்களின் சொல்லடைவு** 144

**படங்கள்** 154

# முன்னுரை

இந்த கோயம்புத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள் இரண்டாம் தொகுதியில் திருப்பூர், பாள்ளாச்சி, பல்லடம், மேட்டுப்பாளையம் ஆகிய வட்டங்களின் கல்வெட்டுகள் தாகுக்கப் பெற்று இப்பொழுது வெளிவருகிறது. மேற்குத் தொடர்ச்சி மலையை யாட்டி மூன்று வட்டங்கள் அமைந்துள்ளன. ஒருவட்டம் இம்மாவட்டத்தின் கிழக்குப் குதியில் உள்ளது. மலையை யொட்டியுள்ள பொள்ளாச்சி வட்டம் பாலக்காட்டுக் ணவாயை யொட்டி அமைந்துள்ளது. இந்தத் தொகுதியில் உள்ள கல்வெட்டுகள் கி.பி. ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 19 ஆம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தைச் சர்ந்தவை. தமிழ், கிரந்த எழுத்துகள் பயன்படுத்தப்பெற்றுள்ளன. ஒரு கல்வெட்டு ட்டெழுத்தில் அமைந்துள்ளது. பல கல்வெட்டுகள் கால வெள்ளத்தில் அழிந்து பாயின. சில கல்வெட்டுகள் குடிபெயர்ந்து போயின.

இந்தத் தொகுதியில் 118 கல்வெட்டுகள் அச்சிடப்பெற்றுள்ளன. அவற்றில் ஒரு செப்பேடும் அடங்கும். கி.பி. 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இச்செப்பேடு வீரகேரள ன்னன் இராஜராஜன் என்பவனால் வெளியிடப்பெற்றது. கொங்குச் சோழர்களுக்கும், வீர கேரளர்களுக்கு மிடையில் நிலைபெற்றிருந்த பகைமையைப் பற்றிய செய்திகளைக் கொண்டுள்ளது. இந்தச் செப்பேடு மூன்று ஏடுகளைக் கொண்டு இருந்துள்ளது. டுவிலிருந்த இரண்டாவது ஏடு கிடைக்கவில்லை. முதல் ஏடு அரசனுடைய ஆட்சி ஆண்டையும் கொடையைப் பெற்றவர் குடும்பம் வீரகேரளர்கள் குடும்பத்திற்குச் செய்த சேவையைப் பற்றியும் குறிப்பிடுகின்றது. இக்குடும்பம் சோழப் பேரரசுக்கும் வீரகேரளர்களுக்குமிடையில் சந்து செய்யும் பணியை வெற்றிக்கரமாகச் செய்து புகழ் பெற்றது. இத்தொகுதியில் உள்ள கல்வெட்டுகள் இடைக்காலக் கொங்கின் சமூக, பொருளியல், சமய நிலையை அறிந்து கொள்ள பல அறிய செய்திகளைக் கொண்டுள்ளன. வேட்டுவர், பூலுவர், பலப்பர், புலப்பர் போன்ற சமூகப் பிரிவினர்கள் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. இத்தொகுதியில் அறியப்படும் தென்குடும்பர், ஐங்கை குடுமிச்சி போன்ற மக்கள் குழுப்பெயரும், பெண்பால் பெயரும் குறிப்பிடத்தக்கவை. தென்குடும்பர் பூலுவர் மரபினைச் சேர்ந்தவர்களாகக் குறிக்கப்பெறுகின்றனர். கொடுவாய்க் கல்வெட்டுகளில் வெள்ளாளர்கள் பற்றிய குறிப்பு கூறப்பெறுகின்றது. வெள்ளியங்காட்டில் கிடைக்கும் கல்வெட்டுகளும் வெள்ளாளர் பற்றிக் குறிப்பிடுகின்றன. கோயில் பூசை செய்யும் சிவப்பிராமணர்கள் பற்றிச்சில அரிய செய்திகளையும் இத்தொகுதிக் கல்வெட்டுகள் தருகின்றன.

இந்த தொகுதியில் இடங்கை வலங்கை பிரிவுகள் பற்றிய குறிப்புகள் ஏதுமில்லை. ஒருவேளை இந்தக் கல்வெட்டுகள் கிடைக்கும் பகுதியில் சமூகம் பழங்குடி நிலையிலிருந்து விடுபடவில்லையோ என்று கருத வேண்டியுள்ளது. கொங்குநாட்டு வெள்ளாளர்கள் அமைப்பாக விளங்கிய சித்திரமேழிப் பெரிய நாடும் கூட இடங்கைப்பிரிவில் வைத்தெண்ணப் பெற்றதோ என்று கருதவேண்டியுள்ளது. விசைய மங்கலத்தில் சித்திரமேழி பெரிய நாட்டுச் சபை கட்டிய சித்திரமேழி விண்ணகர் கொடைகள் இடங்கை தொண்ணூற்றெட்டு சாதியார் பாதுகாப்பில் விடப்பெற்றுள்ளன. அதனால் கொங்கு நாட்டு வெள்ளாளர்கள் இடங்கைப்பிரிவில் வைத்தெண்ணப் பெற்றிருக்க வேண்டும். ஆனால் இதே வெள்ளாளர்களுக்குப் பூலுவர்களுக்குமிடையில் ஏற்பட்ட ஒப்பந்தத்தில் (திருமுருகன் பூண்டி) வெள்ளாளர்களின் பேராளர்களாக சித்திரமேழி பெரிய நாட்டினர் கையொப்பமிட்டுள்ளனர். அதனால் பூலுவலர்கள் அரசு சமூகத்திற்குள் (சாதிய அமைப்பிற்) கொண்டு வரப்பெறவில்லையோ என்று கருதவேண்டும்.

## பாடிகாவல்

பொள்ளாச்சி வட்டம், பெரியகளந்தை ஆதித்தேசுரம் கல்வெட்டுகள் சிலவற்றில் பாடிகாவல் பற்றிய குறிப்புகள் உள்ளன. கொங்கு நாடு முழுவதும் கிடைக்கின்ற கல்வெட்டுகளில் பெரியகளந்தை கல்வெட்டுகளில் மட்டும் பாடிகாவல் பயின்று வருகின்றது. பொதுவாக வட தமிழ் நாட்டில் கி.பி. 12ஆம் நூற்றாண்டிலிருந்து பயின்று வரும் இச்சொல் அந்நாளைய வீரர்களுடன் தொடர்புடையதாகவே குறிக்கப்பெறுகின்றது. அப்பர் திருக்கோடிகா பதிகத்தில் *'பாடி காவலில் பட்டுழல்வீரே'* என்று கூறுவார். அப்பர் பதிகத்தில் இச்சொல் பயின்று வரும் இடம், சூழல் ஆகியவற்றை நோக்கும் போது இழிந்த பொருளிலேயே இச்சொல் ஆளப்பெற்றுள்ளது என்பது புலப்படும். இறைவனுடைய உயர்ந்த அருளைப் பெறுவதற்கு முயற்சியின்றி பாடிகாவலில் பட்டுக்கிடக்கின்றீர் என்று கூறுவதாக அமைந்துள்ளது இக்கூற்று. சில சொற்கள் இலக்கியத்தில் ஒரு பொருளிலும், கல்வெட்டுகளில் அதற்கு நேர்மாறான பொருளிலும் வழங்கியமைக்குப் பல சான்றுகள் உள்ளன. இந்த வகையில் பாடிகாவலும் அடங்கும். பாடிகாவல் அப்பருக்கு முன்பிருந்தே வழக்கத்திலிருதிருக்க வேண்டும். பாடிகாவல் பல்லவர், முற்காலசோழர் (கி.பி. 550-1200) காலங்களில் குறிக்கப்பெறவில்லை. அதற்குக்காரணம் இருந்திருக்க வேண்டும். இந்த உரிமை பழங்குடி அல்லாத ஊரக மக்கள் வாழ்க்கையில் நிலை பெற்றிருந்த உரிமையாக இருந்திருக்க வேண்டும். பின்னாளில் பழங்குடிகள் அரசமைப்பிற்குள் கொண்டுவரப் பெற்றபின் இந்த உரிமை அரசு வழங்கும் உரிமையாக மாற்றம் பெற்றிருக்கலாம். இது போன்ற பல உரிமைகள் சோழர்

காலத்திறுதியில் குறிக்கப் பெறுவதைப் பார்க்கின்றோம். பாடிகாவல் தொண்டை மண்டலத்திலும் நடுமண்டலத்திலும் மிகுதியும் பயின்று வரும் சொல்லாகும்.

## பெற்ற நாச்சியார்

ஆனைமலையில் மூன்று கல்வெட்டுகளில் 'பெற்றநாச்சியார்' பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. பெற்றநாச்சியார் சிற்பத்தைச் செய்து வைத்தமை பற்றி இரண்டு கல்வெட்டுகள் கிடைக்கின்றன. பாண்டிமண்டலத்து இருஞ்சோணாட்டு மண்ணையார்குறிச்சியில் வாழும் சேனாபதி தன் மாதாக்கள் பேரால் பெற்றநாச்சியாரை செய்து வைத்தமை பற்றியும் பெற்ற நாச்சியார்க்கு அமுது படி செய்வதற்கு நிலக்கொடை அளித்தமை பற்றியும் அக்கல்வெட்டுகள் சுட்டுகின்றன. பெற்ற நாச்சியார் என்ற சொல்லை பெற்றம் + நாச்சியார் என்று பிரிந்துப் பொருள் கொள்ளலாம். இவற்றில் பெற்றம் என்பது எருதினைக் குறிக்கும். பேறு என்ற சொல்லிலிருந்து பெற்றம் என்ற சொல் வந்ததென்றும் பேறு என்பதற்கு செல்வம் என்ற பொருண் உண்டென்றும் அறிஞர்கள் கூறுவர். முல்லை நிலத்தில் பேறு (செல்வம்) என்பது கால்நடையே ஆகும். அதனால்தான் எருதினைப் பெற்றம் என்று கூறினர் என்றும் கருதுவர். கொங்கு நாடு கால்நடை வளர்ப்பில் சிறப்புற்றிருந்தமையால் எருது பெற்றம் என்று அழைக்கப்பெற்றது.

கொற்றவைக்கு எருமை, மான், சிங்கம் ஆகியவை வாகனமாகக் குறிப்பிடப் பெற்றாலும் ஆனைமலைக் கல்வெட்டுகள் பெற்றத்தை (எருது) வாகனமாகக் கூறுகின்றன. அதற்குக் காரணமுண்டு. பொதுவாகத் தமிழ் நாட்டில் குறிப்பாக கொங்கு நாட்டில் தொல் பழங்காலம் முதல் இன்று வரை தாய் வழிபாடே மேலோங்கி நிற்கின்றது. தாய் வழிபாட்டினரைச் சிவநேயச் செல்வர்களாக மாற்றுவதற்கு பல வழிமுறைகளைக் கண்டனர். உள்ளூர் மக்கள் வழிபட்ட தாய்த்தெய்வத்தை சிவனின் மனைவியாக்கி வழிபடச் செய்தனர். தாய்த்தெய்வத்தை சிவசம்பந்தமாக்க பல கடுமையான வழிமுறைகளைக் கையாண்டனர் என்பது பல தல புராணங்களால் அறியப்பெறுகின்றது. தாய்த் தெய்வ இணைப்பு அவ்வளவு எளிதில் நடந்து முடிந்து விடவில்லை. இருப்பினும் கல்வெட்டுகளும் படிமக் கலையும் அவ்விணைப்பு முடிந்து போன ஒன்றாகக் கருதச் செய்கின்றன. இந்தப் பின்னணியில் ஆனைமலை பெற்ற நாச்சியாரை அனுக வேண்டும். சிவனுடன் எருதுமேல் நாச்சியார் அமர்ந்த கோலத்தைப் பற்றி பிறபகுதி கல்வெட்டுகள், செப்புதிருமேனிகள், கற்சிற்பங்கள் நிறைய செய்திகளைத் தருகின்றன. ஆனால் கொங்கு நாட்டில் கிடைக்கும் கல்வெட்டு, சிற்பம் ஆகியவை நாச்சியார் மட்டும் பெற்றத்தின்மேல் அமர்ந்த காட்சியைத் தருகின்றன. பெற்ற நாச்சியார் சிற்பத்தை பெரியகளக்கதை ஆதித்தேசுரம் காமகோட்டத்துக் கருவறையில் பார்க்கலாம். இது போன்ற சிற்பம் தமிழகத்தில் வேறெங்குமில்லை.

## ஆனைக்கீஸ்வரமுடையார் - அத்திகோசத்தார்

ஆனைமலை சோமேசுரர் கல்வெட்டுகள் ஆனைக்கீஸ்வரமுடையார் கோயில் என்றொரு கோயிலைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. ஆனைக்கீஸ்வரமுடையார் கோயில் அத்திகோசத்தார் என்ற குழுவினரால் கட்டப்பெற்றிருக்க வேண்டும். கொங்கு நாட்டில் மக்கள் குழுவினர் கட்டிய கோயில்கள் மிகுதியும் உண்டு. அக்கசாலைகள் கட்டிய அக்க சாலீஸ்வரம், ஐந்நூற்றுவர் கட்டிய ஐந்நூற்றீசர், சித்திரமேழி பெரிய நாட்டினர் கட்டிய சித்திரமேழியீசுரர், சித்திரமேழி விண்ணகர், சித்திரமேழி பிள்ளையார் கோயில் என மக்கள் குழுவினர் கட்டிய கோயில்கள் மிகுதியும் உள்ளன. அதுபோலவே அத்திகோசத் தார் கட்டிய கோயில் ஆனைக்கீஸ்வரமுடையார் கோயில் ஆகலாம். மேலும் அத்திகோசத்தார் குழு பற்றிய கல்வெட்டு ஒன்று ஆனைமலையில் உள்ளது. வட்டெழுத்தில் அமைந்த அக்கல்வெட்டு முழுமையும் பொறிந்து விட்டது. சில எழுத்துகள் மட்டுமே உள்ளன. கல்லின் பின் புறத்தில் அத்திகோசத்தார் சிற்பங்கள் உள்ளன. கல்வெட்டு கி.பி. 10 ஆம் நூற்றாண்டிற்குரியது.

அத்திகோசத்தார் பற்றிக் கூறும் முதல் கல்வெட்டு பூலாங்குறிச்சிக் கல்வெட்டாகும். இக்கல்வெட்டு கி.பி. 5-6ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. கல்வெட்டில் 'அத்திகோயத்தாரும் உள்மனையாரும் நாற்பாற்றிணைகளும்' என்று கூறப்பெறுகின்றது. அரசன் கோயில்களுக்குக் கொடை அளிக்கும் போது உடனிருந்தவர்களில் அத்திகோசத்தாரும் அடங்குவர். மேலும் பெருங்கதையில் உதயணன் உருமன்னுவர் முதலிய படைத்தலைவர்களுக்கு படை விருத்தி அளிக்கும்போது உடனிருந்தவர்கள் அத்திகோசத்தார், மனைப்பெரும்சனம், காவிதி மாக்கள், திணைகள் ஆகியோர் குறிக்கப் பெறுகின்றனர். பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் கூறப்பெறுபவர்களில் பலர் பெருங்கதையில் குறிக்கப் பெறுகின்றனர். அதனால் பெருங்கதை பூலாங்குறிச்சி காலத்தைச் சேர்ந்ததோ என்று கருதவேண்டியுள்ளது. அத்தி கோசத்தார் கீழைச் சாளுக்கியர், தெலுங்குச் சோழர்கள், விஷ்ணு குண்டினர் செப்பேடுகளில் கொடையின் பாதுகாவலர்களாகக் குறிக்கப்பெறுகின்றனர். இவை கி.பி. 6-7 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. இதுவரை கூறப்பெற்ற சான்றுகள் மட்டுமின்றி கேரளத்திலும் அத்திகோசத்தார் பற்றிய கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. அக்கல்வெட்டில் அத்திகோசம், சிற்றத்தாணி, குணவாயிற்கோட்டம் ஆகியவை குறிக்கப்பெறுகின்றன. கோவை மாவட்டம், உடுமலைவட்டம் கண்ணாடிபுத்தூரில் கல்வெட்டு இல்லாமல் ஓர் அத்தி கோசக் குழுச் சிற்பம் கிடைத்துள்ளது. மேலே காட்டிய சான்றுகள் அத்திகோசத்தார் தென்னிந்தியா முழுவதும் பரவலாக செயல்பட்டனர் என்பதை உறுதிப்படுத்தும்.

## நன்னன் - நன்னனூர்

சங்க காலத்தில் நன்னன் என்ற பெயருடன் சில வேளிர் வாழ்ந்தனர். மேற்குக் கடற்கரையில் ஏழிற்குன்றத்தைச் சுற்றியிருந்த பகுதியை ஆண்ட நன்னன் கொங்கானம் கிழான் என்று அழைக்கப்பெற்றான். செங்கண்மாத்து (தற்கால செங்கம்) நன்னன் சேய் நன்னன் என்பவன் மலைபடுகடாத்தின் பாட்டுடை தலைவன். கி.பி.12 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் ஆனைமலை நன்னனூர் என்று அழைக்கப்பெறுகின்றது. இந்தப் பெயர் பண்டைநாளில்வாழ்ந்த நன்னன் என்ற பெயருடன் தொடர்புடையதாக உள்ளது. ஒரு சாரார் பெண் கொலை புரிந்த நன்னன் வாழ்ந்த இடம் இன்றைய ஆனைமலை என்றும், அங்குள்ள மாசானி அம்மனே நன்னனால் கொலை செய்யப்பெற்ற பெண் என்றும் கூறிவருகின்றனர். ஆனால் பெண் கொலை புரிந்து நன்னன் ஆனைமலையில் வாழ்ந்தவன் அல்லன். அவன் மேற்குக் கடற்கரையிலிருந்த கொங்கணத்து நன்னன் ஆவான். ஆனைமலை பாலக்காட்டுக் கணவாயிலிருந்தமையால் இந்தப் பெயர் அவ்வூருக்கு வழங்கப்பெற்றிருக்க வேண்டும். பாலக்காட்டுக் கணவாய் சங்க காலத்தில் வாணிக வளம் கொழிக்கும் பகுதியாக விளங்கியது. அதனால் அப்பகுதி சேரர்களுக்கும், நன்ன மரபினர்க்குமிடையில் கைம்மாறிக் கொண்டே இருந்தது. பாலக்காட்டுக் கணவாயும், ஆனைமலைப் பகுதியும் நன்னன் மரபினர் வசம் சிலகாலம் இருந்திருக்க வேண்டும். அந்தக் காலகட்டத்தில் ஆனைமலை நன்னன் மரபினர் தலைநகராகவும் விளங்கியிருக்கலாம். அப்போதோ அல்லது பின்னாளிலோ நன்னனூர் என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம். இவ்வூர் அருகில் நாற்பது ரோமானிய வெள்ளிக்காசுகள் கிடைத்துள்ளன. அவை டைகரீஸ் என்ற மன்னன் வெளியிட்ட காசுகள். நன்னன் தலைநகர் பாழியில் காசுகளைப் புதைத்து வைத்திருந்தான் என்று சங்க இலக்கியம் கூறும். அந்த வகையில் நன்னன் வாணிக வழிகளைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தான் எனலாம். நன்னனின் ஆதிக்கம் நீண்ட நாட்கள் நீடிக்கவில்லை என்பது மற்றொரு சங்கப் பாட்டால் விளங்கும். சேர மன்னன் ஒருவன் நன்னனுடைய ஆதிக்கத்தை நீக்கினான் என்று கூறும். அதனால் பாலக்காட்டுக் கணவாயும் ஆனைமலைப் பகுதியும் மறுபடியும் சேரர் வசம் சென்று விட்டது. மேலும் நன்னன் மரபில் வந்த ஒருவன் நன்னன் உதியன் என்று பெயர் வைத்துக் கொண்டான். இப்பெயர் நன்னன் மரபினர் சேரர்களுக்குக் கீழ் படிந்து விட்டதையே காட்டுகின்றது.

## எறிச்சில் பொழில் வாய்ச்சி

இன்றைய பொள்ளாச்சி இடைக்காலக் கல்வெட்டுகளில் எறிச்சில் பொழில்வாய்ச்சி என்று அழைக்கப்பெற்றது. முன்னொட்டாக வரும் எறிச்சில் என்ற சொல் குறிப்பிடத்தக்கது. எறிச்சில் என்ற சொல் கோநாட்டில் (புதுக்கோட்டை) சங்ககாலத்திலிருந்தே வழக்கத்தில் இருந்துள்ளது. கோநாட்டு எறிச்சிலூர் மாடலன்

மதுரைக் குமரனார் என்ற புலவர் குறிக்கப்பெறுகின்றார். பூலாங்குறிச்சி கல்வெட்டில் பச்செறிச்சில் மலை என்றொரு மலை குறிக்கப்பெறுகின்றது. அது மட்டுமின்றி இன்றும் புதுக்கோட்டைப் பகுதியில் எறிச்சி(ல்) என்ற ஊர்ப் பெயர்கள் உள்ளன. கோவை மாவட்ட கல்வெட்டுகளில் சிறக்கெறிச்சில், புத்தெறிச்சில், நெருப்பெறிச்சில் ஆகிய பெயர்கள் பயின்று வருகின்றன. இந்தப் பெயர்கள் பல்லடம் பகுதியில் பயின்று வருகின்றன. எறிச்சில் என்ற சொல் எறி என்ற வேர்ச் சொல்லிலிருந்து உருவான சொல் ஆகலாம். எறி என்பது அழி, கொல், துண்டாக்கு ஆகிய பொருள்களில் வழங்கப்பெற்றது. அதனால் எறிச்சில் என்ற சொல் காடழித்து உருவாக்கப்பெற்ற ஊர், அல்லது நிலம் என்ற பொருளில் வழங்கியிருக்கலாம். அதற்கு சிறந்த சான்று சிறக்கெறிச்சில் என்ற ஊர் பெயரே ஆகும். கொங்கு நாட்டு வழக்கில் 'சிறை' என்பது காட்டின் ஓர பகுதி.

## எறிவீரபட்டனம்

இத்தொகுதியில் எறிவீரபட்டனம் பற்றி சில கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அவை அனைத்தும் ஒரே ஊரிலிருந்து கிடைக்கின்ற கல்வெட்டுகள் ஆகும். வெள்ளியங்காடு (மேட்டுப்பாளையம் வட்டம்) என்ற ஊரிலிருந்து கிடைக்கின்ற கல்வெட்டுகள் அவை. அவற்றில் 'மாவண்டூரான ராஜேந்திர சோழ எறிவீரப் பட்டனம்' என்று குறிக்கப்பெறுகின்றது. கொங்கு நாட்டின் மேற்குப் பகுதியில் உள்ள மலை ஓரத்தில் பலபட்டனங்கள் உருவாக்கப் பெற்றிருந்தன. மலை படு, பொருட்களை இப்பட்டனங்களுக்குக் கொண்டுவந்து விற்று விட்டுச் செல்வார்கள். கடத்தூர் (உடுமலை), பட்டணம் (பொள்ளாச்சி), மாவண்டூர் (மேட்டுப்பாளையம்) ஆகிய ஊர்களை இந்த வகையில் குறிப்பிடலாம். மலை வாழ் மக்களுக்கும், சமவெளி மக்களுக்குமிடையில் சுமுக உறவும், முரண்பாடும் மாறி மாறி இருந்து கொண்டேயிருந்தன. வீரப்பட்டணம் வணிக வீரர்களுக்கு என உருவாக்கப்பெற்றது. அதனால் இந்தப் பட்டணங்களில் வீரர்கள் தங்கியிருந்தார்கள் என்று கருதலாம். வணிகப்பொருட்களின் பாதுகாப்பு கருதியே இந்த எறிவீர பட்டணங்கள் உருவாக்கப்பெற்றன. அதனால் போரோ, பூசலோ, கலகமோ நடக்கும் காலங்களில் வாணிகர்கள் தங்கிப் பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் உருவாக்கப்பெற்றது. மாவண்டூர் எறிவீரப்பட்டணம் மேற்குத் தொடர்ச்சி மலை அடிவாரத்தில் இருந்தமையால் மலைபடு பொருட்கள் இங்குக் கொண்டுவரப்பெற்று விற்கப்பெற்றன.

## அரசியல் புவியியல்

வீரகேரளர்களில் அதிசய சோழன் என்ற மன்னனுடைய கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. அக்கல்வெட்டில் மீமீசல் நாடு என்றொரு நாடு குறிக்கப்பெறுகின்றது.

இந்நாடு மலைப்பகுதியிலிருந்தமையால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். கொழுமத்தில் கிடைக்கும் மற்றொரு கல்வெட்டு ஏழுநாடுகளைப் பற்றிக் குறிக்கின்றது. அவை கரைவழிநாடு, வெண்டையூர்க்கால் நாடு, வீரகேரள வளநாடு, காவிடிகாநாடு, வாயறைக்காநாடு, நல்லூர்க்கா நாடு, வையாவி நாடு, பேரூர் நாடு ஆகியன. கொங்குநாட்டுக் கல்வட்டுகளில் கி.பி. 13 ஆம் நூற்றாண்டுவரை நாட்டுச் சபை பற்றிய கல்வெட்டுகள் கிடைக்கவில்லை. ஆனால் நாட்டுத் தலைவர்கள் பற்றிக் கூறப்பெறுகின்றது. நாட்டுக் கருமமாராய்வார், நாட்டுச் சாமந்தர் என்று குறிக்கப்பெறும் தலைவர்கள் ஆட்சி செய்தார்கள். கி.பி. 14ஆம் நூற்றாண்டு கல்வெட்டுகளில் நாட்டுச் சபை குறிக்கப் பெறுகின்றது.

## தென்குடுமர்

பல்லடம் வட்டம் பொங்கலூரிலிருந்து கிடைக்கும் கல்வெட்டுகளில் பூலுவரில் தென்குடுமர் என்பவரைப் பற்றிக் குறிக்கப்பெறுகின்றது. தென்குடுமர் என்பதற்கு தேன்குடுமர் என்றும் வாசிக்கலாம். குடுமர் என்பதை குடும்பர் என்று ஒரு சாரார் கருதுகின்றனர்.

## ஐங்கை குடுமிச்சி

சிறக்கெறிச்சில் கல்வெட்டு ஒன்றில் அனுத்திர பல்லவரையன் ஐங்கை குடுமிச்சிகளில் பல்லவரைசி என்பவர் கோயிலுக்குக் கொடை அளித்துள்ளார். ஐங்கை குடுமிச்சிகள் என்பது ஐங்கைத் தொழு என்பதுடன் தொடர்புடையதாக உள்ளது. ஐங்கைத் தொழு என்பது ஓர் ஊரிலிருந்த ஒரு பகுதி ஆகும். குடுமிச்சி என்பது குடுமர் என்பதன் பெண்பால் பெயர் என்றும் கருதப்பெறுகின்றது.

## ஒரு செப்பேடு

இருகூரில் வாழும் திரு. இராமசாமி குருக்கள் என்பவரிடம் இரண்டு ஏடுகள் கொண்ட ஒரு செப்பேட்டுத் தொகுதி உள்ளது. இந்த ஏடுகளுடன் மற்றொரு ஏடும் இருந்திருக்க வேண்டும். முதல் ஏடும், மூன்றாம் ஏடும் உள்ளன. முதல் ஏட்டில் அரசன் ஆட்சியாண்டும் மற்றும் கொடை பெற்ற பிராமணர் குடும்பம் கொடை அளித்த அரசன் குடும்பத்திற்கு ஒரு நூற்றாண்டு காலமாக (கி.பி. 985- 1100) செய்த பணிகள் பற்றிக் கூறப்பெறுகின்றது. இடையிலிருந்த ஏட்டில் கொங்குச் சோழர் உத்தம சோழனுக்கும், வீரகேரளன் இராஜராஜனுக்கு மிடையில் நடைபெற்ற பூசலைப் பற்றிக் கூறுகின்றது. கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து இரு அரச மரபுகளுக்குமிடையில் முரண்பாடுகள் தொடர்ந்து இருந்தன. அதற்காக இருமரபினரும் காரைத் தொழுவில் கோட்டைகளைக்கூட்டினர். வீரகேரளர்கள் கட்டிய கோட்டைக்கு வஞ்சகர் வஞ்சகன்

கோட்டை என்று பெயர். கொங்குச் சோழர்கள் கட்டிய கோட்டைக்குத் தெற்கில் ஒரு பள்ளிப் படை இருந்துள்ளது. அதற்கு மூத்த அப்பாட்டர் பள்ளிப்படை என்று பெயர். கொங்கு நாட்டில் இது ஒன்றே பள்ளிப்படைக் கோயிலாகும்.

இந்தச் செப்பேட்டில் கூறப்பெறும் கொடைகள் வேறுபட்ட தன்மையுடையவை. பணி செய்த பிராமணர் குடும்பத்திற்கு வெள்ளலூர், பேரூர் கோப்பாடி, தென்கரை சூரலூர், வட கரை சூரலூர், வாயறைக்க நாட்டு ஊர்கள் ஆகியவற்றில் உள்ள சிவன் கோயில்கள் காணியாட்சி உரிமை அளிக்கப் பெற்றுள்ளது. மேலும் இரட்டைகால் வைத்துக் கொள்ளவும், சாந்து பூசிக் கொள்ளவும், ஆண் வாரிசு ஒற்றைச் சங்கு ஊதிக் கொள்ளவும், பெண் வாரிசு ஒற்றைச் சங்கு ஊதிக்கொள்ளவும் உரிமை அளிக்கப் பெற்ற செய்தி கூறப்பெறுகின்றது.

இந்தச் செப்பேடு பலவகையிலும் சிறப்புடையது. வீரகேரளர்கள் பற்றிய செப்பேடு இது ஒன்றே ஆகும். செப்பேட்டைப் பொறிக்கும் முறை இச்செப்பேட்டின் மூலம் தெரிகின்றது. முதலில் எழுத்திற்குப் புள்ளியிட்டு சரி தவறு சரிபார்த்துப் பின் கோடிட்டு எழுத்தாக ஆக்கியுள்ளனர். சான்றுக்கு ஓர் எழுத்தை எடுத்துக் கொள்ளலாம். 'ரு' என்ற எழுத்தை எடுத்துக் கொள்வோம். முதலில் என்று புள்ளியிட்டு எழுதி விட்டுப் பிறகு என்று எழுதியுள்ளனர். கொங்கு நாட்டில் வட்டெழுத்து கல்வெட்டுகளில் பிழையின்றி எழுதும் நிலை இருந்துள்ளது. ஆனால் தமிழ் எழுத்தை எழுதும் போது பிழையுடன் எழுதும் நிலையே இருந்துள்ளது. வட்டெழுத்து பல நூற்றாண்டுக்காலம் வழக்கத்திலிருந்தமையால் பிழையின்றி எழுதும் நிலை உருவாகியிருக்கவேண்டும். அதே நேரத்தில் சோழர்கள் தமிழ் எழுத்தை அறிமுகப்படுத்திய பின் தமிழ் எழுத்தை மட்டும் பயன்படுத்தினர். கொங்கில் முதலில் தமிழ் எழுத்து வழக்கில் இன்மையால் பிழையின்றி எழுதும் நிலை உருவாகவில்லை. இப்பகுதியில் உள்ள கோயில் கல்வெட்டுகளில் தமிழ்க்கல்வெட்டுகள் பிழையுடன் இருப்பதைப் பார்க்கலாம். வட்டெழுத்து 11 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து வழக்கொழிந்து விட்டது. தமிழ் எழுத்து வழக்கத்தில் வந்த பின்னும் தமிழ் எழுத்துப் பயிற்சி உள்ளவர்கள் குறைவாகவே இருந்துள்ளார்கள்.

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 179/2004**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | – |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | – | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | – | எண் | : | 1 |

இடம்: சிவன் கோயில் தனிக்கல். தற்போது கோவை அகழ்வைப்பகத்தில் உள்ளது.

குறிப்புரை: வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு நன்னனூரில் கூத்தாடும் தேவர், பிராட்டியார் திருமேனிகள் பூசைக்காக கூத்தன்நம்பி என்பான் வழங்கிய நிலக்கொடை பற்றிக் குறிப்பிடுகிறது.

**கல்வெட்டு:**

1. [வெண்டையூர்க்] கால் வீரகேரள வளநாட்டு நன்னனூர்
2. யில் கூத்தாடும் ஷேவர் பிராட்டி. . .
3. நமையால் அவநேந் கூத்தந்நம்[பி]
4. ம . . . . க்கும்ஊா [ஸம்] ஆறுக்கு . . .
5. பணிநாந் நாழியாக பூவிரண்டு. . .
6. . . . விடங்கஹட்டநேன்

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 180/2004**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 12 ஆம் நூஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | 214 / 1927–28 |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | வீரகேரளர் | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | அதிராஜராஜதேவர் | எண் | : | 2 |

இடம்: சிவன் கோயில் கருவறை தெற்கு ஜகதி.

குறிப்புரை: வீரகேரளவளநாட்டுநன்னனூர் (ஆனைமலை) ஆளுடையார் நக்காண்டாற்கு வெள்ளாளன் மணவாட்டி ஒருத்தியும், வெள்ளான் பூதந்தை கூட்டத்தைச் சேர்ந்த ஒருவனும் நந்தாவிளக்கு எரிக்க 10 கழஞ்சு பொன் கொடை

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோ அதிராஜராஜ தேவற்கு கோனேரின்மை கொண்டான் வீரகேரளவள நாட்டு நன்னனூர் ஆளுடையார் நக்காண்டாற்கு மேற்படியூரில் வெள்ளாளந் வட்டமணியனான அதிராசராச வஞ்சிவேளாந் மணவாட்டியாந

2. . . . த் தேவற்குத் திருநந்தா விளக்கொன்றுக்கு மேற்படியூர் வெள்ளாளரில் பூதந்தைகளில் மனியமறையனான இராசராச வல்லவரையன் . . . வாருதியரு வைத்த பொன் பதிங்கழஞ்சும் . . .

3. . . . இவ்வூரில் . . .

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 12 ஆம் நூஆ |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | 221 / 1927–28 |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | கொங்குச்சோழர் | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | வீரசோழன் | எண் | : | 3 |

இடம்: சிவன் கோயில் அர்த்தமண்டபம் தெற்கு ஜகதி.

குறிப்புரை: கொழுமம் ஊரைச் சேர்ந்த இடையன் ஒருவன் நன்னனூர் நக்காண்டார் கோயிலில் உமாசகிதர் திருமேனியை எழுந்தருளுவித்தான். இத்திருமேனியின் பூசைக்காக மன்னன் 3 மா நிலம் கொடை தர, சோழகுல மாணிக்கச் சதுர்வேதி மங்கலத்து சபையும், நன்னனூர் ஊர் அமைப்பும் இந்நிலத்தைப் பெற்று மேற்படி திருமேனிக்கான பூசையைச் சிறப்பாக மேற்கொண்டனர்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான் வீரகேரளவளநாட்டுச் சோழகுல மாணிக்கச் சருப்பேதி மங்கலத்துச் சபையாற்கு[ம்] நன்னனூர் ஊராற்கும் நம்மோலை

2. குடுத்தபடியாவது தங்களூரில் ஆளுடையார் நக்காண்டார் கோயிலிலே கொளுமத்திருக்கும் இடையரில் மாதன் மஞ்சனான மனுதிங்க பல்லவரையந் உ மாஸிஹிதமாக எழுந்தருளுவி

3. த்த அழகவிடங்கப் பெருமாளுக்கு அமுதுபடிப்புறமாக நான்விட்ட நிலம் மூன்றுமாவும் தங்களூரில் வீரசோழ மன்னறையில் ஸ்ரீ . . . குரித்தான . . . கால் ... ந்துகாடு வெட்டித்திருத்தி

4. க் கொள்வார்களாகவும் இன்னிலம் மூன்றுமாவும் இறையிலி தேவதாயம் எலவை யுகவை மற்றும் ஏப்பேற்பட்டது கொள்ளாதோமாகவும் இன்னிலம் மூன்றுமாவும். . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 182/2004**

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | 14 |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | 223 / 1927-28 |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | |
| அரசு | : கொங்குப்பாண்டியர் ஊர்க் கல்வெட்டு | | | |
| மன்னன் | : சுந்தரபாண்டியன் | எண் | : | 4 |

இடம்: சோமேசுரர் கோயில் அம்மன் சந்நிதி தெற்கு ஜகதி.

குறிப்புரை: பாண்டி மண்டலத்து மண்ணையார் கோட்டை திருமடை விளாகத்து சுந்தரப் பெருமாள் வாழ்தவித்தாரான பல்லவராயர் அன்னையார் பெயரால் நன்னனூர் சிவன் கோயில் வளாகத்திற்குள் திருக்காமக் கோட்ட நாச்சியார் பெற்ற நாச்சியார் என்னும் கோயிலைக் கட்டினார்,. இந்நாச்சியார் அமுதுபடிக்காக அளித்துள்ளார். 150 பணம் கொடை , பொன்னைப் பெற்ற பிராமணர் இப்பணிக்காக ஆண்டுதோறும் முப்பது கலம் 5 குறுணி நெல்லை ஈரப்பதம் நீக்கி திருமடைப்பள்ளி வாசலில் வைத்து அளந்து கொடுத்தனர்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோற்சடையபன்மரான திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீசுந்தர பாண்டிய தேவற்கு யாண்டு யச வது மகரநாயற்று பூர்வபக்ஷத்து வ றெணியும் ஞாயிற்றுக்கிழமையும் பெற்ற பூசத்து நாள் வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு நன்னனூர் ஆளுடையார் ஆனகீஸ்வரமுடைய நாயனார்க்கு பாண்டி மண்டலத்து இருஞ்சே

2. ரனாட்டு மண்ணையார் கோட்டையில் உடையார் சர்ஷேவரமுடைய நாயனார் திருமடைவிளாகத்து சுந்தரப் பெருமாள் வாழ்வித்தாரான பல்லவராயர் மாதாக்கள் பேராலே யேறியருளப் பண்ணின திருக்காமக்கோட்ட நாச்சியார் பெற்றநாச்சியார்க்கு வீரகேரளவள நாட்டு வீரக்கழல் அழகிய சோழச்சதுர்வேதி மங்கலத்து திருவாதவூர் ஸ்ரீ

3. நாராயண பட்ட குமரன் தம்பி வேந்தஸ்வாமி பட்டரும் இவன் தம்பி அனந்த நாராயண பட்டரும் இவன் தம்பி சிவதேவ பட்டரும் இந்நால்வரோம் உபயத்துக்குக் கல்வெட்டிக் குடுத்த பரிசாவது இந்நாச்சியார் பெற்றநாச்சியார்க்கு அமுதுபடிக்கு நாளொன்றுக்கு நெல்லு குறுணியாக ஆண்டொன்றுக்கு நெல்லு முப்பதின்கலனே ஐங்குறுணிப்ப

4. பதக்காக எங்களுக்குப் பிள்ளை பல்லவராயன் தந்த இராசி பணம் புள்ளி . . . ாருய இப்பணம் நூற்று ஐம்பதுக்கும் இந்நாச்சியார்க்கு அமுதுபடிக்கு கற்பத. . . த்தைமூவா . . . ஈரவாசி நீக்கி கோயிற் காலாலே திருமடைப்பள்ளி வாசலிலே ஆண்டுதோறும் சந்திராதித்தவரை அளந்து குடுப்போமாகவும் அளந்து குடாதொழியில் வீரபத்ரகள் மண்கலம் தகத்தும்

5. உண்கலமெடுத்தும் மற்றும் வயிராக்கியஞ் செய்து அளப்ப. . . இந்த உபயம் நெல்லு முப்பதின் கலனே ஐங்குறுணியும் எங்கள் மக்கள் மக்கள் சந்திராதித்தவரை அளப்போமாக கல்வெட்டிக் குடுத்தோம் நாச்சியார் பெற்றநாச்சியார்க்கு நாராயணபட்டரும் வேந்தஸ்வரபட்டரும் அனந்த நாராய

6. ண பட்டரும் சிவதேவ பட்டரும் இந்நால்வரோமும் . .

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : – |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : கி.பி. 14 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : 222 / 1927–28 |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : – |
| அரசு | : போசளர் | ஊர்க் கல்வெட்டு | |
| மன்னன் | : வீரவல்லாளன் III | எண் | : 5 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை வடக்குத் குமுதம்.

குறிப்புரை: நன்னனூர் (ஆனை மலை) ஆனைக்கீஸ்வரர் கோயில் பெற்ற நாச்சியார் கோயிலுக்கு முன்பு வழங்கிய நிலக் கொடையை வீரக்கழல் அழகிய சோழர் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் போசள அரசன் காலத்திலும் மீண்டும் உறுதிபடுத்தி வழங்குதல். மன்னறை, கண்ணாறு, கொண்டோடி முதலிய சொற்கள் குறிப்பிடத்தக்கன.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ வீரவல்லாள தேவர் பிருதுவிராட்சியம் பண்ணி அருளாநின்ற வெகுதானிய சம்வச்சரத்து மார்கழி நாள் . . . வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு வீரக்கழல் . . . திருமங்கலத்துடையோம் நன்னனூர் ஆளுடையார் ஆனக்கீஸ்வர

2. முடையார் கோயிலில் வாழ்வித்தாரான பல்லவராயர் மாதாக்கள் பேராலே இவர் உகந்தருளப் பண்ணின நாச்சியார் பெற்ற நாச்சியார்க்கு முன்னாளில் நாராயண பட்டர் உள்ளிட்ட . . . ஆண்டொன்றுக்குக் குடுப்பதான நெல்லுக்கு பதிந் கலத்துக்கு இவ்வூ . . . .

3. டு சு முதல் நாங்கள் எங்களில் இசைந்து இந்நெல்லுக்கு எங்களூரில் அருவானாதித்தன் மன்னறையில் கண்ணாற்றுக்குக் கீழ் சிறகு தடி . . ரு . . . கீழ்பாற்கெல்லை இராமபட்டர் நிலத்துக்கு மேற்கும் வடபாற்கெல்லை அனந்தநாராயண பட்டர் நிலத்துக்குத் தெற்கும்

4. மேற்பாற்கெல்லை கண்ணாற்றுக்கு கிழக்கும் தென்பாற்கெல்லை திருவெண்காடுடையார் நிலத்துக்கு வடக்கும் இந்நான்கெல்லையில் நடுவுபட்ட . . . இந்நிலம் அரைக்காணி முந்திரிகையும் . . . இந்த மேல் சிறகு தடி . . . நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை இக்கண்ணாற்றுக்கு மேற்கும்

5. வடபாற்கெல்லை கிழக்கும் தென்பாற்கெல்லை மேற்படியார் நிலத்துக்கு. . . கிற கொண்டோடிக்கு வடக்கும் இந்நான்கெல்லையுள் நடுவுபட்ட கார் . .

6. . . . கையும் இக்கண்ணாற்று இச்சிறகு . . . நிலத்துக்கு கீழ்ப்பாற்கெல்லை இக்கண்ணாற்றுக்கு மேற்கும் வடபாற்கெல்லை ஸ்ரீராமபட்டர் நிலத்துக்குப் பாய்கிற கொண்டோடிக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை அனந்தநாராயண பட்டர் நிலத்துக்கும் கிழக்கு

7. . . . மேற்படியார் நிலத்துக்குப் பாய்கிற கொண்டோடிக்கு வடக்கு இன்னான் கெல்லையுள் நடுவுபட்ட இந்நிலம் காணியும் ஆக . . . இந்நிலமும் காணியும் இக்கோயில் காணியுடைய சிவப்பிராமணர் அனுபவித்து இவ் அமுதுபடி செலுத்தி . .

8. . . . இந்நிலத்தால் வரும் கடமை விநியோகம் உபாதி வெட்டி மற்றும் எப்பேர்பட்டனவும் ஊரிலே இறுத்துக் குடுப்போமாகவும் இப்படிக்கு இந்நிலம் முக்காணியும் சந்திராதித்தவரை செல்ல செம்பிலும் சிலையிலும் வெட்டிக் குடுத்தோம். . .

9. யும் செல்ல ஊரிலே இறுத்துக் குடுப்போமாக ஊர் இறையிலியாக விட்டோம் வீரக்கழல் அழகிய சோழ சதுர்வேதி மங்கலத்து சபையோம் இப்படிக்கு இவை திருவாதவூரில் ஊர். . .

10. நநா . . . டயன் எழுத்து இப்படிக்கு சபையார் சொல்ல இந்த சாதனம் எழுதினமைக்கு இவ்வூர் ஊரார்க்கு இரையூருடையான் மாலைதாழ்மாராயன் எழுத்து

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | 14 |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | 224 / 1927-28 |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | - |
| அரசு | : கொங்குப்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : சுந்தரபாண்டியன் | எண் | : | 6 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை மேற்கு ஜகதி.

குறிப்புரை: நன்னனூர் சிவன் கோயில் வளாகத்திற்குள் அமைக்கப் பெற்ற திருக்காமக்கோட்டத்து நாச்சியார் பெற்ற நாச்சியார் அமுதுபடிக்காக ஆண்டு ஒன்றுக்கு 30 கலம் நெல் கொடை. இக்கொடையை அளித்தவர் வடக்கிலூர் ஊரவர்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ . . . பன்மரான திருபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீசுந்தர பாண்டியதேவற்கு யாண்டு ௰சு வது . . . பூர்வபக்ஷத்து . . . நாயற்றுக் கிழமையும் பெற்ற பூசத்து நாள் வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு நன்னனூர் ஆளுடையார் ஆனக்கீஸ்வரமுடைய நாயனார்க்கு பாண்டி மண்டலத்து இருஞ்சோனாட்டு

2. மண்ணையார் பெருமாள்கோட்டையில் உடையார் ஸர்வேஸ்வரமுடைய நாயனார் திருமடைவிளாகத்து சுந்தர பாண்டிய . . . நாராயணப் பல்லவராயர் மாதாக்கள் பேராலே ஏறியருளப் பண்ணின திருக்காமக்கோட்ட நாச்சியார் பெற்ற நாச்சியார் வீரகேரள வளநாட்டு வடக்கிலூரான வீ

3. ர பாண்டிய நல்லூர் ஊரவரோம் உபையத்துக்குக் கல்வெட்டி. . . குறுணியாக . . பரிசாவது இந்நாச்சியார் பெற்ற நாச்சியார்க்கு அமுதுபடிக்கு நாளொன்றுக்கு நெல்லு . . . ஆண்டொன்றுக்கு முப்பதின் கலனே செய்து உபையம் அளப்பதாக எங்களுக்குப்

பிள்ளை பல்லவராயர் தந்த இராசிபாலையன் ாருய இப்பணம் நூற்று ஐம்பதுக்கும்

4. இந்நாச்சியாற்கு அமுதுபடிக்கு. . . காலாலே ஆண்டுதோறும் இந்நெல்லு முப்பதின் கலனும் சந்திராதித்தவரை . . . அளந்து குடாதொழியில் வீரபத்திரகள் மண்கலம் தகர்த்தும் வெண்கலம் மெடுத்தும் மற்றும் வயிராக்கியஞ் செய்து அளப்பித்துக் கொள்வராராகவும் இப்படி. . .

5. . . . உபைய நெல்லு முப்பதின் கலனும் ஆண்டுதோறும் சந்திராதித்தவரை அளப்போமாக கல்வெட்டிக் குடுத்தோம் நாச்சியார் பெற்ற நாச்சியார் திருக்காமக் கோட்டம் வீரபாண்டிய நல்லூர்

6. ஊரவரோம் இப்படிக்கு அமரகோன் எழுத்து இப்படிக்கு இவை அழகபாலன் எழுத்து இப்படிக்கு இவை எழும்போதழகியான் எழுத்து. . .

7. கள் சொல்ல இப்படிக்கு கல்வெட்டினமைக்கு இப்படியெழுதினேன் பெரிய தேவன் எழுத்து

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | 24 |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1192 ஆம் நூ.ஆ |
| ஊர் | : ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | 217 / 1927–28 |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | - |
| அரசு | : கொங்குச்சோழர் | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : வீரசோழன் | எண் | : | 7 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை மேற்கு ஜகதி.

குறிப்புரை: நன்னனூர் சிவன் கோயிலுக்கு சில வரிகளை மன்னன் விட்டுக் கொடுத்தமை பற்றியது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேஸரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவீரசோழ தேவற்கு யாண்டு உயச ஸ்வஸ்திஸ்ரீ கோனேரின்மை கொண்டான் வீரகேரள வளநாட்டு நன்னனூர்
2. வும் . . . பட்டவையும் இறை கொள்ளாதோமாக யாண்டு இருபத்து மூன்றாவதன் எதிராமாண்டு முதல் கொள்ளாதோமாகவும் இவ்வோலையிலும் எழுத்திட்டுக் குடுத்தோம் இது சந்திராதித்தவரை
3. செல்வதாக செம்பிலும் சிலையிலும் வெட்டிக் கொள்க நந்தமாரானார் பாற்படுத்து குடுத்த செம்பியனுத்தர மந்திரி எழுத்து யாண்டு உயச வது நாள். . . பன்மாஹஸ்வர ரக்ஷை

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 186/2004**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | – |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | – | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | – | எண் | : | 8 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை மேற்குக் குமுதம்.

குறிப்புரை: நன்னனூர் சபையார்க்கு மன்னன் வெளியிட்ட அரசாணை பற்றியது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ . . . கோனேரின்
2. மை கொண்டான் வெண்டையூர் . . .
3. சதுர்வேதி மங்கலத்து சபையோர் பக்கல் . . .
4. இப்படி எல்லைக்கு வடக்கும் திருநாற் . . .
5. பதின் எழுகோல் ஒப்பு செய்யப்பட்டு . . .
6. பெருவழி முக்கோலுக்கு . . . ங்கல . . .
7. த்தவற் செல்வதாக செம்பிலும் சிலையிலும் . . .
8. . . . குடமுங்குச்சியுங் கொண்டு . . .
9. . . . குடுத்தேன் ஆதிசைவச் சக்கரவர்த்தி . . .
10. யேன் இத்தன்மம் ஸ்ரீபன்மாஹேஸ்வர ரக்ஷை

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | 21 |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1294 நூ.ஆ. |
| ஊர் | : ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | 218 / 1927–28 |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : கொங்குச்சோழர் | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : விக்கிரம சோழன் III | எண் | : | 9 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை மேற்குக் குமுதம்

குறிப்புரை: கொழுமம் ஊரைச் சேர்ந்த சமக்கட்டு சேனாபதிகளில் ஆதித்தன் முதலியான சோழப் பல்லவரையன் நன்னனூர் நக்காண்டார் மற்றும் பெரிய நாச்சியார் கோயிலுக்கு சீயக்கி பழஞ்சலாகை அச்சு 300 கொடையளித்தமை பற்றியது. இக்கொடைத் தொகையை பராசிவன் ஒருவன் பெற்றுக் கொண்டான்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரி பன்மரான திரிபுனவ சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரம சோழ தேவற்கு யாண்டு
2. இருபதாவதினெதிர் . . . கொழுமத்தில் சமக்கட்டி சேனாபதிகளில் ஆதித்தன் முதலியான சோழப்
3. பல்லவரையன் வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு நன்னனூர் ஆளுடையார் நக்காண்டார்
4. பெரியநாச்சியார் திருவாதிரை திருப்பூரத் திருநோன்பு நோன்ற . . . தன்மத்துக்குவிட்ட . . . அ . . . சோ
5. னாட்டில் பராசிவனேன் உடைய கூத்தன் ராமந்தனான இராஜராஜவாச்சிய மாராயனேன் இந்த . . .
6. தியனாம் இவ்விருவோம் கொண்ட சீயக்கி பழஞ்சலாகை அச்சு முன்னனூறும் கொண்டு இவ்வாட்டை முதல் . . .

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 188/2004

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | – |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | கொங்குச் சோழர் | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | வீரராசேந்திரன் | எண் | : | 10 |

இடம்: சோமேசுரர் கோயில் அர்த்தமண்டபம் வடக்கு ஜகதி.

குறிப்புரை: அரசன் தன் பெயரால் வீரராசேந்திரன் திருமடைவிளாகம் ஒன்றினை நன்னனூரில் அமைத்து அதில் குடியேறிய அல்லது நிலம் பெற்ற 10 பேர் சிவன் கோயிலில் நாள்தோறும் பணி செய்ய வகைசெய்தான். அதிசய சோழ மன்னறை, அதிராசராச மன்னறை பற்றிய குறிப்பு வருகிறது. திருமடைவிளாக நிலத்தில் ஆடு மாடு வைத்துக் கொள்ள மன்னன் இசைவளித்துள்ளான்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோனேரிமைகொண்டான் வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு நன்னனூர் ஆளுடையாற் நக்காண்டார் கோயில் க்ஷேத்திர பிள்ளையார் தேவகன்மிகளுக்கு நம் ஓலை குடுத்த பரிசாவது நம்பேரால் . . . [வீர] ராசேந்திரன் திருமடைவிளாகமென்று முந்நாளில் நாட்டி நின்ற திருசூலக்கல்

2. எல்லையாகத் திருமடைவிளாகம் மாற்றிக் கொள்ளத்தக்கதாக இத்திருமடை விளாகத்தில் ஏற்றின மேற்படியாரில் பத்துப்பேர் நித்தச் சேவகம் சேவிக்கப் பேர் ஒன்றுக்கு நிலம் காணியாக விட்ட நிலம் ஒரு மாவரையும் ஆடும்மாடும் வேண்டுக்கு இந்நிலத்தோடே கூடவிட்ட நிலம் முந்திரிகைக் கீழ்மா காலும் நிலம் . . .

3. . . . முன்னாளில் இக்கோயிலில் சித்திரமேழி . . . குடிநீங்காதேவதானமாய் இறையிறுத்து வந்த அதிசய சோழ மன்னறையில் நிலம் முக்காணி அரைக்காணி முந்திரிகை கீழ்க்காலும் அதிராஜராஜ மன்னறையில் நிலம் முக்காணி அரைக்காணிக் கீழரையும் வீரசோழ மன்னறையில் . . . அரைக்காணியும் வீரராசேந்திர சோழ . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : – |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : – |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : – |
| அரசு | : | ஊர்க் கல்வெட்டு | |
| மன்னன் | : | எண் | : 11 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை மேற்குக் குமுதம்.

குறிப்புரை: துண்டுக் கல்வெட்டு. சிவன் கோயிலுக்கு நிலமும் நெல்லும் கொடை தந்த செய்தி சொல்லப்படுகிறது.

**கல்வெட்டு:**

அ

1. வெண்டையூர்கால் வீரகேரள வளநாட்டு பிரம்மதேயம் . . .
2. சிவபாத சேகர மன்னறைக்கும் சன்பைக்கு. . .
3. . . .
4. முழத்தால் அய்ங்கலமாக வந்த நெல்லுக்க. . .
5. பெறுவாராக நம்மோலை குடுத்தோம் இந்நிலத்தால் . . .

ஆ.

1. க்கு முக்குடி ஊர் பொதுக் காட்டுக்குத் தெற்கும் இந்நாந்கெல்லை உட்பட்ட நிலம் அரைமா
2. வும் மந்நறையில் ஊர்பொது நிலங்காணிக்கு தெற்கெல்லையாவது பூர்வ . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : – |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : – |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : – |
| அரசு | : வீரகேரளர் | ஊர்க் கல்வெட்டு | |
| மன்னன் | : வீரநாராயணன் | எண் | : 12 |

இடம்: விஸ்வேஸ்வர சுவாமி கோயில் முன்பு உள்ள பாவுகல்.

குறிப்புரை: நரையனூர் நாட்டு உடைய பிராட்டிச் சதுர்வேதி மங்கலத்து நாட்டார் என்னும் அமைப்பினர் வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்து குலசேகர விண்ணகரப் பெருமாள் கோயிலுக்கு வழங்கிய கொடை பற்றியது. பெருமாள் கோயில் பணி செய்யும் பிராமணர் காணியுடைய நம்பிமார் என்று அழைக்கப் பெறுகின்றனர்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ வீரநாராய
2. ணச் சதுர்வேதி
3. மங்கலத்து ஸ்ரீ
4. குலசேகர வி
5. ண்ணகர எம்
6. பெருமாள் கோ
7. யிற் காணியு
8. டைய நம்பிமா
9. ரோம் நரைய
10. னூர் நாட்டு உடை
11. ய பிராட்டிச் சதுர்
12. வேதி மங்கலத்
13. து நாட்டார்

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : – |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : – |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : – |
| அரசு | : வீரகேரளர் | ஊர்க் கல்வெட்டு | |
| மன்னன் | : வீரநாராயணன் | எண் | : 13 |

இடம்: விஸ்வேஸ்வர சுவாமி கோயில் முன்பு உள்ள மாவு கல்

குறிப்புரை: இரு ஊர்கள் பெருமாள் கோவிலுக்கு வழங்கப்பட்டமை. பெருமாள் கோயிலில் வழிபடுவார் ஸ்ரீவைஷ்ணவர் என்று அழைக்கப் பெறுகின்றனர்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. [வீரநாராயண தேவற்கு]
3. யாண்டு. . .
4. ணம . . .
5. ம
6. கிரை . . .
7. ல்லு . . . உடை
8. யார்களும் [இ]
9. ரண்டு ஊரிலும்
10. கைக் கொள்ளக்
11. கடவார் செ
12. ல்வதாக எ
13. மக்கு இது ஸ்ரீ
14. வைஷ்ணவர்க
15. ள் ரக்ஷை

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : – |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : – |
| அரசு | : | கொங்குச்சோழர் | ஊர்க் கல்வெட்டு | |
| மன்னன் | : | விக்கிரமசோழன் | எண் | : 14 |

இடம்: விஸ்வேஸ்வரர் கோயில் அம்மன் சந்நிதி கருவறை தெற்கு அதிட்டானம்.

குறிப்புரை: வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு நன்னனூர் என்பது ஆனை மலையின் பண்டைய பெயராகும்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரம சோழ தேவற்குச் செல்லா நின்ற . . . காத்திகை மாதத்து வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு

2. நன்னனூர் . . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 193/2004**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | 10 |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 12 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | – |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | வீரகேரளர் | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | வீரநாராயணன் | எண் | : | 15 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை வடக்கு ஜகதி?

குறிப்புரை: வெண்டையூர்க்கால் வீரகேரள வளநாட்டு (பொள்ளாச்சி வட்டம்) மடிகை (வணிக அமைப்பு) சிவன் கோயிலுக்கு வழங்கிய கொடை பற்றியது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ வீரநாராயண
2. தேவற்கு திருவெ
3. ழுத்திட்டுச் செல்லா நின்ற
4. திருநல்லி யாண்டு
5. பத்தாவது சே
6. சாழ புரத்து
7. வெண்
8. டையூ
9. ாக்கால்
10. வீரகேரளவள
11. நாட்டு
12. மடிகை

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : 215 / 1927–28 |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : – |
| அரசு | : | – | ஊர்க் கல்வெட்டு | |
| மன்னன் | : | – | எண் | : 16 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை வடக்குக் குமுதம்.

குறிப்புரை: நன்னனூர் சிவன் கோயிலுக்கு தம் மன்னறையிலிருந்து 6 மா நிலத்தை அரசன் கொடையளித்தல்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோனேரின்மை கொண்டான் வீரகேரள வளநாட்டு நன்னனூர் ஆளுடையார் .... இவ்வூரில் இருந்து இந். . .
2. மக்கள் . . . விட்ட மன்னறை முந்தி நால் நிலம் இநிலம் ஆறு மாவும் முன்பு இறையிறுத்து . . . முதல் இறைபுரவு . . . இவை
3. கொள்ளக் கடவதல்லதாக இறையிலி தேவதானம் செம்பிலும் சிலையிலும் வெட்டிக் கொள்வாராக. . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 195/2004**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | 27 |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | 220 / 1927–28 |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | கொங்குச் சோழர் | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | வீரராசேந்திரன் | எண் | : | 17 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை தெற்குக் குமுதம்.

குறிப்புரை: நன்னனூர் நக்காண்டார் கோயிலுக்கு பெருமாள் அதிகாரம் செய்வார்களில் விலாடசிங்கதேவன் என்பான் சந்தியாதீபம் எரிக்க 3 அச்சுக் காசு கொடையளித்தல்.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ வீரராசேந்திர தேவற்கு யாண்டு உயஎ வது பெருமாள் அதிகாரஞ் செய்வார்களில் வடகூற்று விலாட சிங்க தேவனேன் நன்னனூர் ஆளுடையார் நக்காண்டார் கோயிலுக்கு வைத்த சந்தியா தீபமொன்றுக்கு ஒடுக்கின அ . . .

2. அச்சு மூன்றும் இக்கோயில் காணியுடைய சிவப்பிராமணர் இராசராச சக்கரவர்த்தி உள்ளிட்டாரும் நம்பி பத்திர சக்கரவர்த்தியும் கைக்கொண்டு இக்கோயிற் குடங் கொண்டு கோயில் புகுவார் சந்திராதித்தவரை எரிப்போமாகவும்

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 196/2004**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | 219 / 1927-28 |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| அரசு | : | கொங்குப் பாண்டியர் ஊர்க் கல்வெட்டு | | | |
| மன்னன் | : | வீரபாண்டியன் | எண் | : | 18 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை தெற்கு குமுதம்.

குறிப்புரை: கல்வெட்டின் தொடக்கம் இல்லை. நன்னனூர் சிவன் கோயிலுக்கு நிலம் கொடை தரப்பட்ட செய்தி உள்ளது.

**கல்வெட்டு:**

1. . . . அந்தராயம் பொலிவு பொற . . . எப்பேற்ப்பட்டநவும். . . அடிகளல்லவாகவும் மேல் திருப்பதம் . . . விட்ட நிலம் வீரராசேந்திர மன்னறை . . .

2. மன்னறையில் காணி. . . திருத்தி நாலும் கூட இக்காட்டை திருத்தி வருவீர்களாகவும் . . . . வதிக்கு மேற்கு இரண்டாங் கண்ணாற்றில் யென் நிலங்காணியில் யென் கூறரைக் காணியும் . . . . தன்மபாலன் உதைய சங்கனேன் யிதில் யென்கூறு முந்திரிகையும் இதுக்கு நன்றாகக் கல்லையும் வை. . .

3. . . . படி செம்பிலும் சிலையிலும் வெட்டிக் கொள்வார்களாகவும் இப்படி பிடி[பாடும்] . . . ஓலை . . . கண்ணாற்றுக்கு மேற்கு . . . கவறில் எந்நிலத்துக்கும் வடக்கு . . . பல்லவரையன் நிலத்துக்கு கிழக்கும் கனகவல . . . க்குத் தெற்கும் நான்கெல்லைக்குட்பட்ட எங்கள் நிலம் ஆளுடையார் நக்காண்டார் பண்டாரத்திலே. . .

4. குடுத்தோம் இவை எல்லாம் வல்ல சோழ மூவேந்த வேளான் எழுத்து யாண்டு . . . எலவை யுகவை எப்பேர்ப்பட்டநவும் நாங்களேய் வைப்போமாக இப்டிப சம்மதித்து இந்நிலம் விட்டேன் ஆளுடையார் நக்காண்டார்க்கு வீரபாண்டிய மூவேந்தவேளாந் தந்மம் இவை விசைய சிங்கதேவனெழுத்து . . . பன்மாஹேஸ்வர ரக்ஷை

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 197/2004**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | - |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| அரசு | : | - | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | - | எண் | : | 19 |

இடம்: சோமேசுரர் கோயில் கருவறை மேற்கு ஜகதி.

குறிப்புரை: தொடக்கம் இல்லை. துண்டுக் கல்வெட்டு. சிவன் கோயிலுக்கு நில வருவாய் கொண்டு நந்தா விளக்கு ஒன்று எரிக்க வகை செய்தமை சொல்லப்படுகிறது. நன்னனூர் சபை மற்றும் ஊரைப் பற்றிய குறிப்பு வருகிறது.

**கல்வெட்டு:**

1. காணியும் இக்கோயில் காணியுடைய சிவப்பிராமணன் சோழந் புளியநுஞ் சோழ ருத்திராபதிப் பெருமாளும் தாங்களே இந்நிலங் கொண்டு இத்திருநந்தா விளக்கு ஒன்றுக்கு சந்திராதித்தவரைக்கு
2. ஞ் செலுத்துவாராகக் கல்வெட்டிக் குத்தோம் சபையோமும் ஊரோமும் இத்தந்மம் பன்மாஹேஸ்வர ரக்ஷை

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 198/2004**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | ஆனைமலை | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | – |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | – | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | – | எண் | : | 20 |

இடம்: சோமேசுரர் சிவன் கோயில் கருவறை வடக்குக் குமுதம்.

குறிப்புரை: துண்டுக் கல்வெட்டு. நக்காண்டார் கோயிலுக்கு நிலம் கொடை தந்தது பற்றிச் சொல்கிறது.

**கல்வெட்டு:**

1. குடுத்த படியாவது தங்களூர் ஆளுடையார் நக்காண்டார். . .
2. நிலமாவது வீரநாராயணப் பெருவாய்க்காலுக்கு கிழக்கு வரதும்ப
3. பாண்டிய மூவேந்த வேளான் நிலத்துக்குக் கிழக்கு. . .
4. வும் பயிற். . .

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 911/2004

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : கிணத்துக்கடவு | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | – |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : – | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : – | எண் | : | 1 |

இடம்: பொன்மலை வேலாயுத சுவாமி திருக்கோயில் கருவறை தெற்குக் குமுதம்

குறிப்புரை: துண்டுக் கல்வெட்டு. நந்தாவிளக்கு எரிய வழங்கிய கொடை பற்றியது. கவுசிய கோத்திரம் சிவப்பிராமணன் மற்றும் வேட்டுவன் ஒருவன் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

**கல்வெட்டு:**

1. யிலும் எழுத்து வேட்டுவநேன் கோயிற்காணியுடைய சிவப்பிராமணர் கவுசிய கோத்திரத்து. . .
2. குடும . . . பெருமாளும் நாங்கள் இக்கோயிலுக்கு நந்தாவிளக்கு ஒன்றுக்கு. . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 912/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | கோயம்புத்தூர் | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | பொள்ளாச்சி | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13 ஆம் நூ.ஆ. |
| ஊர் | : | கிணத்துக்கடவு | இந்தியக் கல்வெட்டு | | |
| மொழி | : | தமிழ் | ஆண்டுஅறிக்கை | : | – |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | – | ஊர்க் கல்வெட்டு | | |
| மன்னன் | : | – | எண் | : | 2 |

இடம்: பொன்மலை வேலாயுத சுவாமி திருக்கோயில் கருவறை தெற்குக் குமுதம்.

குறிப்புரை: கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் முருகன் கோயிலில் திரு அமுது செய்வதற்காக பெரும்பற்றாளர் ஒருவன் நெல் கொடையளித்தமை பற்றியது.

**கல்வெட்டு:**

1. சக்கரவத்திகள் ஸ்ரீ . . .
2. ன பெரும்பற்றாளரில் க . . .
3. . . . பட . . . . யும் அத்த . . .
4. நூறும் ஏருந்திரக்க . . .
5. நாட்டார் நெல் . . . ள

